# தீன் மாலை

## தெளிவுரையும் விளக்கமும்



நூலாசிரியர் :

அக்குறணை கசாவத்தையைச் சேர்ந்த

அல் வலியுல் பாழிலுஷ் ஷைகுல் காமில்

அல் ஆரிபு பில்லாஹி

**முஹம்மது லெப்பை ஆலிம்**

இப்னு ஷெய்கு அஹ்மத் ஆலிம் அவர்கள்.

தெளிவுரையும் விளக்கமும் :

**அ. ஸ. அப்துஸ் ஸமது** B.A. (Hons.)

விரிவுரையாளர்,

அட்டாளைச்சேனை ஆசிரியர்

பயிற்சிக் கல்லூரி.

---

**தமிழ் மன்றம்**

# முன்னுரை

கசாவத்தை ஆலிம் அப்பா என்கின்ற பெரியார் முஹம்மது லெவ்வை ஆலிம் அவர்கள் இற்றைக்கு 200 ஆண்டுகளில் முன் வாழ்ந்தவராவர். அன்றைய சூழ்நிலையில் மக்கள் பயன்பெறும் பொருட்டு தீனின் அடிப்படைகளை விளக்க இந்நூலைச் செய்துள்ளார். தீனின் பாலுகளான இஸ்லாம், ஈமான், தௌஹீத், மஹரிபா என்னும் நான்கு அம்சங்களையும் இந்நூலில் வெளிவாக விளக்குகிறார் ஆசிரியர்.

தொடர்நிலைச் செய்யுளாக அமைந்துள்ள இப்பாவினத்திற்கு 'தொங்கல்' என்று பெயரிட்டுள்ளார், ஆசிரியர். முஸ்லிம் புலவர்களே 'தொங்கல்' என்ற இப்பாவினத்தைக் கையாள்வர். அதாவது அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம், தொடர்ந்து செல்வதே 'தொங்க'லாகும்.

நான் விஷய வாரியாக 27 தலைப்புகளில் அதனைப் பிரித்துக் கொடுத்துள்ளேன்.

இந்நூலுக்கு ஓர் உரை எழுதிப் புதிதாகப் பதிப்பித்து வெளியிட வேண்டும் என்பது அன்புள்ளத்தை அணிகலனாகக் கொண்ட இலக்கியச் செல்வர் அல்ஹாஜ் எஸ். எம். ஹனீபா அவர்களின் பெருவிருப்பமாகும். அவர்களுடைய அன்பான வேண்டுகோள்படி நான், அருஞ்சொல், தெளிவுரை, விளக்கம் என்பன அமையுமாறு மிகத் திருப்தியுடன் இதனைச் செய்துள்ளேன். இந்நன் முயற்சியில் என்னை ஈடுபடுத்தியமைக்கு அல்ஹாஜ் ஹனீபா அவர்களுக்கு என் ஆழிய நன்றிகள் உரியனவாகும்.

1936ல் அறபுத்தமிழில் வெளிவந்த இந்நூல் இன்று தமிழில் வெளிவருகிறது. தமிழ் கூறும் நல்லுலக முஸ்லிம் மக்கள் இந்நூலால் நற்பயன் பெறுவார்களாக.

'அன்பகம்'

அக்கரைப்பற்று.

09. 04. 87

அன்பின்,

அ. ஸ. அப்துஸ் ஸம[redacted]

# கசாவத்தை ஆலிம் புலவர்

இலங்கை வாழ் முஸ்லிம் புலவர்களில் கசாவத்தை ஆலிம் புலவரும் ஒருவராவார். ''கசாவத்தை ஆலிம் அப்பா புலவர்'' என இப்பொழுது அழைக்கப்படும் இவர்கள் அக் குறணையிலிருந்து ஒரு மைல் தொலைவில் உள்ள கசாவத்தை எனும் சிற்றூரில் பிறந்தார்கள். இவர்களது இயற்பெயர் செய்கு முஹம்மத் என்பதாகும். தந்தையார் பெயர் அல்லாமா அஷ் ஷெய்கு அஹ்மது என்பது. இவர்களும் கவிஞராக சன்மார்க்க அறிஞராகத் திகழ்ந்தவராவார்.

கசாவத்தை ஆலிம் புலவர் அவர்கள் ஒரு சிறந்த மார்க்க அறிஞர், எழுத்தாளர், புலவர். அத்துடன் இறையருள் பெற்ற வலியாகவும் இருந்தார்கள்.

இவர்களது குடும்பத்தினரை ''சுலைமானுல் கர்ணி'' என்ற வம்சத்தின் வழித் தோன்றல்கள் என அழைக் கின்றனர். சுமார் ஐநூற்றுக்கு மேற்பட்ட வருடங்களாக அன்னாரது குடும்பத்தினர் அக்குறணையில் வாழ்ந்து வருகின்றனர். அவர்களிற் பலர் ஆலிம்களாகவும் அறபு, தமிழ் மொழிகளில் பாண்டித்தியம் பெற்றவர்களாகவும் தொண்டு செய்துள்ளனர்.

அறபுத் தமிழில் இலக்கியம் படைத்தவர்கள் அறபுத் தமிழில் பாண்டித்தியம் பெற்றது போலவே தமிழிலும் தேர்ச்சி பெற்றிருந்தனர். இதனால் நல்ல எதுகை மோனை நயத்துடன் இவர்கள் பாடல்களைப் பாடியுள்ளார்கள். கசாவத்தை ஆலிம் புலவர் அவர்களின் தீன்மாலை இதற்கு

நல்லதோர் எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது. ஓசைச் சிறப்பும் சொல்லாட்சிகளும் சிறப்புற்று அமைந்துள்ளன.

கசாவத்தை ஆலிம் புலவர் அவர்கள் இளவயதிலேயே கல்வியில் ஆர்வமும் ஈடுபாடும் கொண்டிருந்தார்கள். ஆரம்பக் கல்வியை இங்கு முடித்துக்கொண்ட இவர்கள் உயர்தரக் கல்வியை இந்தியாவில் பெற்றூர்கள். காயல் பட்டணத்திலுள்ள உயர்தர அறபுக் கல்லூரிகளிலும் தமிழ்க் கல்லூரிகளும் அறபு, தமிழ் இரண்டையும் துறை போகக்கற்றுத் தேறிஞர்கள். இவர்கள் பகல் முழுவதை யும் படிப்பதிலும் ஆராய்ச்சி செய்வதிலும் கழிப்பார்கள். இரவில் விழித்திருந்து கட்டுரைகள் கவிதைகள் எழுது வார்கள். இவர்களது எழுத்தாற்றல் வேகமானது. அழகிய எழுத்துக்களில வேகமாக எழுதும் திறன் இவர் களிடம் இருந்தது. அதனை ஒரு சம்பவம் மூலம் அறியக் கூடியதாக உள்ளது.

ஒருமுறை இவரது ஆசிரியரால் எழுதப்பட்ட ஐந்து பாகங்களைக் கொண்ட பெரிய கிரந்தம் ஒன்றை ஒரே இரவில் பிரதி பண்ண வேண்டிய அவசியம் ஏற்பட்டது. இப்பணியை முடித்துத் தருமாறு ஆசிரியரால் கேட்கப் பட்டபோது எவரும் அதற்கு முன்வரவில்லை. அங்கு கல்வி கற்ற மாப்பிள்ளை லெப்பை ஆலிம் புலவர் போன்ற கல்வி அறிஞர்கள் கூடத் தயங்கி நின்றனர். இறுதியில் கசா வத்தை ஆலிம் புலவர் அவர்கள் அப்பணியைச் செய்து முடிக்க முன்வந்தார்கள். இரவு இஷாத்தொழுகைக்குப் பின் அப்பணியை ஆரம்பித்தார்கள். இரவு முழுவதும் கண் துயிலாது அப்பணியைச் செய்து சுபஹு உடைய நேரத்தில் அப்பணியை முடித்ததோடு, சரி பிழையும் பார்த்துக் கொண்டார்கள். சுபஹுத் தொழுகைக்குப் பின்

தாம் எழுதிய பிரதியை ஆசானிடம் கையளித்தார்கள். பிரதியைப் பார்த்ததும் மகிழ்ச்சி அடைந்த ஆசிரியர் அவர்கள் தமது களிப்பை கசாவத்தை ஆலிம் புலவர் அவர்களைக் கட்டியணைத்துத் தெரிவித்துக் கொண் டார்கள். ஏனைய மாணவர்களும் புலவரை வெகுவாகப் பாராட்டினார்கள்.

கசாவத்தை ஆலிம் புலவர் அவர்கள் பாடிய தீன்மாலை அறபுத்தமிழ் இலக்கியத்திலே முக்கிய இடத்தை வகிக் கின்றது. முஸ்லிம்கள் கைக்கொள்ளவேண்டிய ஐம்பெரும் கடமைகளை மிக இலகுவான நடையில் இனிய ஓசைச் சிறப்புடன் இந்நூல் கூறுகிறது.

மேலும் புலவர் அவர்கள் தமது குருவான காயல் பட்டணத்து தைக்கா சாகிப் அப்பா பேரில் நீண்ட பாமாலை ஒன்றையும் கோவைப் படுத்தியுள்ளார்கள். முகியித்தீன் ஆண்டகை பேரில் "வித்திரியா" (கவிதை நூல்) ஒன்றும் இவர்களால் இயற்றப்பட்டுள்ளது. வெலி காமம் அப்துல் காதர் மௌலானா பேரில் மௌலூதுப் பாடல்களைப் பாடியுள்ளார்கள். இத்தகைய பாடல்கள் சில இடங்களில் வருடா வருடம் ஓதப்படுகின்றன. அலுத் காமத்தில் அடங்கப்பட்டுள்ள ஷெய்கு ஹஸன் வலியார் பேரிலும் கவிதை பாடியுள்ளார்கள். இதே போன்று மேலும் பல பெரியார்கள் பேரில் கவிதை பாடியுள் ளார்கள். மேலும் "ஹம்ஸிய்யத்" என்ற அறபு நூலையும் மொழி பெயர்த்துள்ளார்கள். இவர்களது "இப்னு நபாத்தா" எனும் குத்பாப் பிரசங்க மொழி பெயர்ப்பு நூலின் மூலம் இவரது வசன நடைச் சிறப்பை உணரலாம்.

கசாவத்தை ஆலிம்புலவர் அவர்கள் இஸ்லாமிய மறு மலர்ச்சித் தந்தை அறிஞர் சித்தி லெப்பையின் ஞான ஆசிரியராகவும் இலக்கிய ஆசிரியராகவும் இருந்தவர் ஆவார். அறிஞர் சித்தி லெப்பையின் முற்போக்கான பணி களுக்குப் பின்னணியாகவும் தூண்டுதலாகவும் அமைந்த வர்கள் கசாவத்தை ஆலிம் புலவர் அவர்களேயாவார்கள்.

கசாவத்தை ஆலிம் புலவர் அவர்கள் ஹஜ்ஜுக் கட மைக்காக மக்கா சென்றிருந்தபோது இவர்களது கவிதை ஆற்றலையும் சமய ஞானத்தையும் கண்டு வியந்து போற்றி அங்கிருந்த அறிஞர் பெருமக்கள் ''ஷெய்குல் உலமா'' என்ற சிறப்புப் பட்டத்தை வழங்கி கௌரவித்தார்கள். இத்தகைய பட்டம் பெற்றவர்கள் அறபு உலகிலே மிகச் சிலரேயாவர்.

கசாவத்தை ஆலிம் புலவர் அவர்கள் தமது இறுதிக் காலப் பகுதியை அதிகமாக சமூகப்பணிக்கும் இறை பணிக் குமே அர்ப்பணித்தார்கள். அக்குறணை பெரிய பள்ளி வாயிலை நிர்மாணித் தவர்களும் இவர்களேயாவார். இவர்கள் தமது 83-ம் வயதிலே இறையடியெய்தினார்கள். (இன்னா லில்லாஹி வயின்னா இலாஹி ராஜிஊன்) அக்குறணைப் பெரிய பள்ளி வாயிலிலேயே அன்னார் அடக்கம் செய்யப்பட்டிருக்கிறார்கள்.

—எம். எச். எம். அலிறிஸாப்
அக்குறணை

# தீன் மாலை

## இறைதுதி

1. பகரரும் பொருளே! எங்கும்
பரிவுடன் நிறைந்த கோவே
நிகரிலா விறையே நின்மா
நிலத்துறு மனுவில் தீனோர்
அகமுடன் புறமும் ஈமா
னுகத்தீன் பாலை யெல்லாம்
வகை தொகை விரித்துக் கூற
வல்லவா துணைசெய் வாயே.

***அருஞ்சொல்:-***

*பகரரும்-கூறுதற்கரிய, பரிவு-அன்பு, கோ-அரசன், மனு-மனிதர், தீனோர்-இஸ்லாமானோர்.*

***தெளிவுரை:-***

*கூறுதற்கு அரிதாகிய மெய்ப்பொருளே! பூவுலகெங்கும் நிறைந்து மிக்க அன்பாட்சி செய்யும் அரசே! ஒப்பற்ற எங்களது இறைவா! உன் பூமியிலே வாழ்கின்ற மனித குலத்தில் தீன் வழியைப் பின்பற்றுபவர்கள் மனதாலும் செயலாலும் தீனுக்குரிய கட்டாயக் கடமைகளையெல்லாம் வகைப்படுத்தியும், தொகைப்படுத்தியும் விபரித்துக் கூறுவதற்கு வல்லவனாகிய இறையே நீ துணைசெய்வாயாக.*

## நபி (ஸல்) மற்றும் தோழர்கள் பேரில் வாழ்த்து

ஆதிபெரியோன் தனைப் புகழ்ந்து
ஆல நபி மேலே ஸலாம் ஸலாத்தும்
ஓதி நபிமாரை நால்யார்களை
உறுதியாம் நபி தோழர் மாரை

வேத வொலி மாரை பெரியோர்களை
மேலோனருள் தங்கும் உலமாக்களை
காதலுடன் போற்றி அடிபணிந்து
கவல்கிறேனிந்த தீன்மாலையை

*அருஞ்சொல்:-*

*ஆலம்-எல்லா உலகங்கள், ஸலாம்-சாந்தி, ஸலவாத்து-வாழ்த்து, நால்யார்கள்-நான்கு தோழர்கள், கவல்தல்-கூறுதல்*

*தெளிவுரை:*

*முதன்மையானவனுகிய இறைவனைப் புகழ்ந்து உலகின் இறுதி நபியாகிய (ஸல்) அவர்களை வாழ்த்தி முகமன்கூறி மற்றும் நபிமார்களையும், நான்கு தோழர்களையும், பெருமானுர் பேரில் மிக்க உறுதி கொண்ட மற்றும் தோழர்களையும், வேதங்களில் தேர்ச்சி பெற்ற வொலிமார்களையும், பெரியோர்கள், இறைவன் அருள் தங்கும் உலமாப் பெருமக்கள் ஆகியோரையும் அன்புடன் பணிந்து இந்தத் தீன் மாலையைக் கூறத் தொடங்குகிறேன்.*

## தீனை அறிவதன் பயன்

1. எல்லாம் படைத்தவன் தீன்வகையை
இனிதாய் அறியாதோர் தவம்க ளொன்றும்
செல்லாதிறையிடம் கபூலாகவே
சீராய் தீன்வகை அறிந்த பேர்கள்
நல்லார் அவர்கள் செய்யும் தவங்கள்
நாயனிடத்தினில் கபூலுமாகி
பொல்லா நரகத்தில் புகுதாமலே
பொன்னூர் சுவர்க்கத்தில் சுகித்து வாழ்வார்

**அருஞ்சொல்:-**

தவம்-வணக்கம், கபூல்-நிறைவேறல், பொன்-அழகு, சுகித்து-இன்புற்று.

**தெளிவுரை:-**

உலகு மற்றும் ஜீவராசிகள் அனைத்தையும் படைத்தவனின் நியதியாகிய தீன்வகையை இனிய முறையில் அறியாதவர்களின் வணக்கங்கள் ஒன்றும் அவ்விறைவனிடம் அங்கீகரிக்கப்படாது. சீரான முறையில் தீன்வகையை அறிந்தவர்கள் சிறந்தோராவர். அவர்கள் செய்யும் வணக்கங்கள் இறைவனின் அங்கீகாரம் பெறும். அவர்கள் தீமை நிறைந்த நரகத்தில் புகாமலே, அழகு மிகுந்த சுவர்க்கத்தில் நுழைந்து இன்புற்று வாழ்வர்.

2. வாழ்வார் படித்ததின்படி நடந்தோர்
 வாகாய் தீன்வகை அறியாத பேர்
மாள்வார் துக்கத்தில் ஈமானன்றி
 வல்ல நபிமன் ருட்டம் பெருமல்
தாழ்வார் நரகத்தில் ஊழிகாலம்
 தரிப்பாராகையால் தீனோரெல்லாம்
பாழ்சீர் துன்யாவில் மருண்டிடாமல்
 படைத்தோன் தீன்வகை படிக்க நன்றே

**அருஞ்சொல்:-**

வாகு-சிறப்பாக, மாள்தல்-அழிதல், ஊழி-இறுதி, மருள்தல்-மயங்குதல், தீன்-நேர்வழி.

**தெளிவுரை:-**

தீனின் வகைகளைப் படித்து அதன்படி நடந்தவர்கள் இம்மையிலும், மறுமையிலும் மகிழ்ச்சியாக வாழ்வர்.

அழகிய தீன் வகைகளை அறியாத பேர்கள் இருமையிலும் துக்கத்தில் அழிவர். மறுமையின் போது வல்லமை தங்கிய நபிகள் திலகம் (ஸல்) அவர்களின் மன்ருட்டத்தை (ஷபாஅத்)யும் பெருமல் தாழ்ந்த நரகத்தில் ஊழிகாலமும் தரித்து அழுந்துவர். ஆதலால் தீனவர்களெல்லாரும் அழிந்து போகக்கூடிய உலகின் மயக்கத்தில் மருண்டிடாமல் இறைவனின் தீன்வகைகளைப் படிப்பது நன்ரும்.

3. ஏகன் வமாஉமிறு இல்லாலியஹ்
 புதுல்லாஹ வெனும் ஆயத்தில்
ஏகனருளினுன் மனிதர்களே
 ஏவப்படவில்லை தீன் அதனை
வாகாய் கலப்பறவே அல்லாவை
 வணங்கித் தொழுகவே ஒழிய என்ன
சாகானுரைத்ததால் முஸ்லிமானேர்
 சகலரும் தீனை அறிய வேண்டும்.

**அருஞ்சொல்:-**

ஏகன்-ஒருமையானவன், சாகான்-இறப்பில்லாதவன், வாகாய்-சிறப்பாக

**தெளிவுரை:-**

இறைமறையில் அல்லாஹுதஆலா, 'வமாஉமிறு இல்லாலியஹ்புதுல்லாஹ' என்ற ஆயத்தில் 'மனிதர்களே, அல்லாவை சந்தேகமற்ற முறையில் அழகாக வணங்கிடுவதற்காவே தீன்வழியை உங்களுக்கு அருளினேன்' என்ருன். இறப்பில்லாதவனுன அவன் அருளியவாறு முஸ்லிம்கள் அனைவரும் தீன்வழியை அறிந்து நடந்திட வேண்டும்.

## தீனுடைய பர்லு நான்கு

4. மார்க்கமெனும் எங்கள் தீன் தனக்கு
வாய்ந்த பர்லு நாலுண்டது கேள்
ஏற்கும் இஸ்லாமும் ஈமானதும்
இசைந்து தௌஹீதும் மஹரிபத்தும்
காக்கும் இதுநாலில் ஒவ்வொன்றுக்கும்
கணக்காம் பர்லுகள் தானுமுண்டு
ஆர்க்கும் இவையெல்லாம் அறியக்கடன்
அருளக் கேளுங்கள் அன்புள்ளோரே !

**அருஞ்சொல்:-**

*பர்லு - கட்டாயக்கடன், இசைந்த - விருப்பமான, தௌஹீத்-ஏகத்துவம், மஹரிபா-இறைஞானம்.*

**தெளிவுரை:-**

*தீனெனும் எங்கள் மார்க்கத்துக்குக் கட்டாயமான கடமைகள் நான்கு உண்டாம். அவையாவன :- இஸ்லாம், ஈமான், தௌஹீத், மஹரிபா என்பனவாம். இவை ஒவ்வொன்றுக்கும் தனித்தனிக் கடமைகள் உண்டு. ஒவ்வொரு முஸ்லிமானவருக்கும் இவையெல்லாம் அறிவது கடமையாகும். அன்புள்ளவர்களே, இவற்றை நாம் கூறுகிரும் கேளுங்கள்.*

## இஸ்லாமுடைய பர்லு ஐந்து

5. முந்தும் பர்லான இஸ்லாமுக்கு
மொழிந்த பர்லேந்தாம் ஒன்ருவது
நன்ரும் திருக்கலி மாஷஹாதத்
நவில்வதும் நிலேப்படத் தொழவும்

விந்தை வலியோர்கள் சகாத் ஈயவும்
இனிய றமழானில் நோன் பாகவும்
அந்தம் செறி ஹஜ்ஜு செயவும் இந்த
ஐந்தும் இஸ்லாமின் பர்லெந்துமே.

**அருஞ்சொல்:-**

திருக்கலிமா-மேலானவசனங்கள், நவில்தல்-கூறுதல், சகாத்-ஏழைவரி, ஈய-கொடுக்க.

**தெளிவுரை:-**

முதல் கடமையான இஸ்லாத்துக்கு கூறப்பட்ட கடமைகள் ஐந்தாம். அவையாவன :- 1. கலிமா சொல்வது, 2. நிலைபாடானதொழுகை, 3. தகுதியுடையோருக்குச் சகாத் வழங்கல், 4. றமழானில் நோன்பு நோற்றல், 5. சிறப்புத்தங்கிய ஹஜ்ஜு செய்தல் என்பனவாம்.

**விளக்கம்:-**

1. திருக்கலிமாவை நாவினால் மொழிந்து மனத்தில் ஒப்புக்கொள்ளல், 2. நிலைபாடான ஐந்து வக்துத் தொழுகையினையும் தொழல். 3. தகுதியுடையவர், எட்டுக் குழுவினருக்கும் சகாத் வழங்கல், அவர்கள் விபரம் வருமாறு :

1. பக்கீர் (சீவியம் கழிக்க வழி இல்லாதவன்.) 2. மிஸ்கீன் (சொற்பவருமானம் கிடைப்பவன்) 3. ஆமில் (சகாத் வசூலிப்பவர்) 4. மௌலா இஸ்லாம் (புதிதாக இஸ்லாத்தைத் தழுவியவர்கள்) 5. நிபந்தனையிடப்பட்ட அடிமை. 6. கடனைத்தீர்க்க வழி இல்லாதவர். 7. இஸ்லாத்திற்காக புனித யுத்தம் செய்பவர். 8. சன்மார்க்கத்திற்காக பிரயாணம் செய்பவர்.

4. றமழான் மாதத்து முப்பது நோன்பும் நோற்றல்

5. பணவசதியுடையோர் ஹஜ் செய்தல்.

### ஈமானுடைய பர்லு ஆறு

6. இரண்டாம் பர்லான ஈமானுக்கு
நிறைந்த பர்லாறு உண்டு கேளீர்
ஒன்றும் அல்லாவுக் கீமான் கொள்ளல்
உகந்த மலக்குகள்க் கீமான் கொள்ளல்
நன்றும் வேதங்கள்க் கீமான் கொள்ளல்
நபிமார் அடங்கல்க்கும் ஈமான் கொள்ளல்
உண்டாம் ஒடுக்க நாட் கீமான்கொள்ளல்
உடையோன் களாவுக்கு ஈமான் கொள்ளல்.

*அருஞ்சொல்;-*

*ஈமான் - நம்பிக்கை, ஒடுக்கத்து நாள் - இறுதிநாள். உடையோன்-இறைவன், களா-முன்னளப்பு*

*தெளிவுரை:-*

*இரண்டாம் கடமையான ஈமானுக்கு கடமைகள் ஆறு. அவையாவன : அல்லாவைக் கொண்டும், உவப்பான மலக்குகளைக் கொண்டும், சிறப்பான வேதங்களைக்கொண்டும், உயர்ந்த நபிமார்களைக் கொண்டும் மற்றும் ஒடுக்கத்து நாள், களா கத்ரு ஆகியவற்றைக் கொண்டும் நாம் உறுதி கொள்ளல் வேண்டும்.*

### தௌஹீதுடைய பர்லு நான்கு

7. மூணும்பர்லான தௌஹீதுக்கு
மொழிந்த பர்லு நாலுண்டது கேள்
தோணுதாத்தை தௌஹீது செய்தல்
தூய சிபத்தை தௌஹீது செய்யல்
கோணு நாயகத் தன மதனை
குறிப்பாய் தௌஹீது செய்தல் பின்னே
வீணுகா நாயன் 'அப்ஆல்'களை
விரும்பி தௌஹீது செய்வதுமே.

**அருஞ்சொல்:-**

தௌஹீத்-ஏகத்துவம், சிபத்து-பண்புகள், அப்ஆல்கள் -(இறைவனுடைய) செயற்பாடுகள்

**தெளிவுரை:-**

மூன்றும் கடமையான தௌஹீதுக்கு கூறப்பட்ட கடமைகள் நான்காகும். அவை :- நம் புறக்கண்களுக்குப் புலப்படாத மெய்ப்பொருளை ஏகன் என்று ஒப்புக்கொள்ளல். அம்மெய்ப் பொருளின் பண்புகளை ஏற்றுக்கொள்ளல். அந்த இறைவன் மிகத்தூயவன் எக்குற்றமும் அற்றவன் என்று உணர்தல். வீணாகாத அவனுடைய செயல்களை ஏற்று அதில் கூறப்பட்டவை ஒவ்வொன்றிலும் அவனுடைய ஏகத்துவத்தை உணர்தல்.

**விளக்கம்:**

இறைவனின் ஆகுமான பண்புகள் 20. அவை :- 1. வுஜூதுன்-உண்மை 2. கிதமுன்-பூர்வீகத்தன்மை 3. பகாஉன்-நிலைத்திருத்தல், 4. முகாலபதுன் லில்ஹவாதிதி -புதியனவற்றிற்கு ஒப்பாகாதிருத்தல், 5. கியாமுஹு பினப்ஸிஹி - தன்னைக்கொண்டே நிலைத்திருத்தல், 6. வஹ்தானிய்யதுன் - ஒருவனாக இருத்தல், 7. ஹயாதுன்--ஜீவன், 8. இல்முன் - அறிவு, 9. இருததுன்-நாட்டம், 10.குத்றதுன் - தத்துவம், 11. ஸம்உன்-செவி ஏற்குதல், 12. பஸறுன்-பார்த்தல், 13. கலாமுன் - பேசுதல், 14. ஹய்யுன்-சீவித்திருத்தல், 15. ஆலிமுன்-அறிபவன், 16. முரீதுன்-நாட்டமுடையவன், 17. காதிருன்-தத்துவ முடையோன், 18. ஸமீஉன்-கேட்பவன், 19.பஸீறுன்-பார்ப்பவன் 20. முத்தகல்லிமுன்-(நாவின்றிப்) பேசுபவன்.

இவற்றிற்கு எதிர்மறையாக-முஸ்தஹீலான பண்புகள் 20 உண்டு. இவை இறைவனில் அமைந்திருக்கமுடியாதவை என்பது பொருள்.

*அல்லாவுக்கு இருப்பதும் இல்லாதிருப்பதுமான பண்பு ஒன்று. இதனை ஜாயிஸான சிபத் என்பர். மனிதருக்கு நன்மையளித்தல், தீயோராக்குதல், கொடுத்தல், கொடா திருத்தல், போன்றவை அவனுக்குடமையுமன்று விலக்கு மன்று.*

## மஹ்ரிபத்துடைய பர்லு நான்கு

8. நாலாம் பர்லான மஹ்ரிபத்தில்
நயந்த பர்லு நாலுண்டது கேள்
மேலோன் திரு தாத்தை உண்டென்பதும்
மேவும் சிபாத்ததை உண்டென்பதும்
கோல அப்ஆல்கள் உண்டென்பதும்
குருவாம் நபிமார்கள் உண்மையெல்லாம்
சீல முடனே உண்டென்பதுவும்
சிறந்த மஹ்ரிபாவின் பறுலே !

**தெளிவுரை:-**

*நான்காம் கடமையான இறைஞானத்துக்குரிய கடமை கள் நான்காகும். அவை இறைவனுடைய 'தாத்' என்னும் துரிபடுநிலையை உண்டு என்று ஏற்றுக் கொள்ளல், 2. அவனுக்குரிய 41 பண்புகளையும் ஒப்புக்கொள்ளல். 3. அழகிய செயல்களை அங்கீகரித்தல், 4. நமக்கு வழி காட்டிகளாக அவனுடைய திருத்தூதர்கள் இருக்கிறார்கள் என்பதை மனம் ஒப்புதல்.*

## பர்லு விபரம்

9. தீனென்றுரைப்பதன் பொருளாவது
நேமம்வழிபாடும் கூலியுமாம்
ஆன இஸ்லாமின் பொருளாவது
அல்லா ஏவல்கள் தனை யெடுத்து

ஈன விலகலைத் தவிர்தலுமாம்
ஈமான் என்றதின் பொருளைக் கேளாய்
தேனும் கல்பினல் உண்மை கொண்டு
சிறந்த நாவால் விண்ணப்பம் செய்தே

செய்யும் சரீரத்தால் அமல் செய்வதும்
சிறந்த ஈமானின் பர்லாகுமே
தூய தௌஹீதின் பொருளாவது
தூய்யோன் தனக்கொப்பு நிகரன்றியே
மெய்யாம் அவனுடை ஒருமைப்பாட்டை
மேவி அறிதலாம் மஹ்ரிபத்தின்
உய்யும் பொருளதை உரைக்கக் கேளீர்
உடையோன் தாத்தையும் சிபாத்தையுமே

வலியோன் அப்ஆலும் றஸூலுடைய
உண்மை அறிவதும் மஹ்ரிபத்தாம்
நிலையாம் இஸ்லாமின் பர்லைந்தினில்
நிரப்பமாம் முதல் பர்லாவது
கலிமா ஷஹாதத்து சொல்வதாகும்
கனதியுடன் அந்த கலிமாவுக்கு
பலமாம் பர்லு நால் ஷர்த்து நாலு
பேசக் கேளுங்கள் பிரிவாகவே !

***தெளிவுரை:-***

*தீன் என்பதன் பொருள் நியமமான வழிபாடும் அதன் பலனைப் பெறுதலுமாம்.*

*இஸ்லாம் என்பதன் பொருளாவது, இறைவனல் கூறப்பட்ட ஏவல்களை செயற்படுத்தி விலக்கல்களைத் தவிர்த்தலுமாம்.*

ஈமான் என்பதன் பொருளாவது தீனை மனதில் நிர்ணயம் செய்தும், வாயினால் மொழிந்தும் உடம்பினால் வணக்க வகைகளைச் செய்வதுமாம்.

தௌஹீதின் பொருளாவது :- இறைவன் தனக்கு ஒப்பும் நிகருமில்லை என்பதும், அவனுடைய ஒருமைப் பாட்டை அறிந்து கொள்வதுமாம்.

மஃரிபா எனும் இறைஞானத்தின் பொருள் :- இறைவனின் தாத் எனும் தரிபடுதலையும் சிபத் என்னும் பண்புகளையும், அப்ஆல் என்னும் செயற்பாடுகளையும் அறிந்து கொள்வதாகும். அத்தோடு றஸூல் (ஸல்) அவர்களது உண்மையையும் அறிவதாகும்.

இஸ்லாத்தின் முதலாவது கடமை ஷஹாதத்துக் கலிமாவைச் சொல்வதும் அதன் பொருளை அறிவதுமாம். அந்தக் கலிமாவுக்கு நான்கு பர்ழுகளும் நான்கு ஷர்த்துகளும் உண்டாம்.

**அருஞ்சொல்;-**

நேமம்-நியமமாக, ஏவல்-கட்டளை, ஈன-கெட்ட, கல்பு-மனம், அமல்-வணக்கம், உய்யும்-தேறுதல் தரும், ஷர்த்து-சட்டம்

**விளக்கம்:**

'**தாத்**' என்னும் சொல் இறைவனின் அடிப்படைத் தன்மையான, பிறப்பும் இறப்பும் அற்றிருப்பது. எங்கும் பராபரமாய் இருப்பது, உருவமில்லாதிருப்பது, ஏகனாயிருப்பது, இணை துணை அற்றிருப்பது, ஒப்போ உவமையோ இல்லாதிருப்பது ஆகியவற்றைக் குறிக்கும்,

**அப்ஆல் :-** இறைவனின் செயற்பாடுகள் என்பது இதன் பொருள். அவனன்றி அணுவும் அசையாது. உலகத்தின் எல்லா செயற்பாடுகளும் அவனது நாட்டத்தின்படியே நடைபெறுகின்றன. களா கத்ரு-என்னும் முன்னளப்பும் அவன் செயல்களே. அதற்கான காரணங்களையும், நியாயங்களையும் அவனே அறிவான். மனிதன் இறைவனது நியதிக்கு உட்பட்டவன்.

றஸூல் (ஸல்) பற்றிய உண்மை :- முஹம்மது நபி (ஸல்) அவர்களைப் படைக்கவில்லையென்றால் உலகினையும் மற்றும் வஸ்துக்களையும் ஜீவராசிகளையும் படைத்திருக்க மாட்டேன் என்பது இறைவன் கூற்று. இந்த உண்மையை அறிய வேண்டும். இதனை சீறு ஆசிரியர் உமறுப்புலவர் கூறுகையில்

கலைமறை முஹம்மதென்னும்
காரணமில்லையாகில்
உலகு விண்ணிரவி திங்கள்
ஒளி உடுக்கணம் சுவர்க்கம்
மலைகடல் நதி பாதாளம்
வானவர் முதலாயும்மை
நிலை யுறப்படைப்பதில்லை
என இறை நிகழ்த்தி ளுனே !

என்று ஆதம் நபி (அலை) அவர்களுக்கு இறைவன் சொன்ன ஒரு கூற்றைப் பாடி இருக்கிறார். இறுதித் தூதராகிய பெருமானாரின் அந்தஸ்தும் பெருமையும் அளவிடற்கரியது. இதனை ஆய்ந்து அறிவதும் மஹரிபாவின் ஞானமாகும்,

## கலிமாவின் பர்லு நான்கு ஷர்த்துகள் நான்கு

10. அல்லாதிரு தாத்தை அறிவதுவும்
அன்பாம் சிபாத்ததை அறிவதுவும்
சொல்லும் அப்ஆலே அறிவது வும்
தூதர் நபி உண்மை அறிவதுமாம்
நல்ல கலிமாவின் ஷர்த்து நாலு
நாவால் மொழிவதும் கல்பதனுல்
வல்லமை கொண்டுண்மை கொள்ளலும்
வாகாய் இஹ்லாசும் யகீனுமாமே
ஆகும் இது நான்கும் கலிமாவுக்கு
அன்பாம் ஷர்த்துகள் என்றறிவீர்.

***அருஞ்சொல்:-***

*வாகாய்-அழகாக, இக்லாஸ்-தெளிவு, யகீன்-உறுதி*

***தெளிவுரை:-***

*கலிமாவின் ஷர்த்துகள் நான்கு அவை :- நாவால் மொழிதல், மனத்திஞல் உண்மை கொள்ளுதல், எண்ணத்தில் தெளிவுபெறுதல், திடமான உறுதி கொள்ளுதல்.*

*கலிமாவின் பர்லுகள் நான்கு. அவை அல்லாவுடைய தாத்தை அறிதல், அவனுடைய சிபத்தை அறிதல், அவனுடைய செயற்பாடுகளை அறிதல், தூதர் நபி (ஸல்) பற்றிய உண்மைகளை அறிதல்.*

## இஸ்லாத்தின் பர்லு ஐந்து

11. வாகாய் ஒரு நாளைக்கைந்து நேரம்
வண்மை பதினேழு றக் ஆத்தையும்
ஏகன் விதிப்படி முஸ்லி மானோர்
எல்லோரும் நிலைப்படவே தொழ

ஆகக் கடனு மென்றறிந்து தொழல்
அன்பாம் இஸ்லாமின் பர்லு ரெண்டே
ஆண்டுக்கொரு வாட்டி சகாத்து முதல்
அன்பாயுடையோர்கள் கணக்குப் பார்த்து

பூண்ட விதிப்படி பங்குள்ளோர்க்கு
பிரித்துக் கொடுப்பது இஸ்லா மதன்
மூன்ரும் பர்லாகும் வருஷந்தோறும்
முஸ்லிமா னோர்கள் தனக்கிரங்கி
சான்றுவரும் றமழான் மாதத்தில்
சங்கையாய் நோன்பு பிடித்திடவே
இஸ்லாமாகிய ஆண்கள் பெண்கள்
எளியோர் வலியோர்கள் எவர்மீதிலும்

பிசகாக் கட னுமென் றறிந்து நோன்பு
பிடிப்பதிஸ்லாத்தின் பர்லு நாலாம்
நஸல்கள் மிடியன்றி சீமான்கள்க்கு
நடக்கும் வாகன பலமுண்டாகி
கசலே வழிதனில் பய மில்லாமல்
கண்டால் மக்க நன்னகரிற் சென்றே
சென்றே மக்கத்தில் ஹஜ்ஜு செய்தல்
சிறந்த இஸ்லாமின் பர்லைந்து ஆம்.

**அருஞ்சொல்:-**

*வாட்டி-முறை, சகாத்-ஏழைவரி, நஸல்-நோய், மிடி துன்பம், கசலேவழி-தன்வழி. வாகு-அழகு*

***தெளிவுரை:-***

*இறைவன் விதித்தபடி முஸ்லிமான ஆண் பெண்கள் அனை வரும் ஒரு நாளைக்கு ஐந்து நேரம் பதினேழு றக்அத்தையும் சிறப்பாகத் தொழவேண்டும். இது இஸ்லாத்தின் இரண்டா வது கடமை. (முதலாவது கடமை கலிமாச் சொல்லுதல்) மேலும் ஆண்டொன்றுக்கு ஒருமுறை கணக்குப் பார்த்து குறிப்பிட்ட எட்டுக் கூட்டத்தினருக்கும் சகாத்தை பிரித்துக் கொடுக்க வேண்டும். இது மூன்றாவது கடமை அடுத்து எளியோர் வலியோர் எவர் மீதினும் றமழான் மாதம் முப்பது நோன்பு பிடிப்பது தவறாத நான்காட கடமையாகும். நோய்கள் துயரங்கள் இல்லாத சீமான்கள் உடம்பில் பலமும் வாகன வசதியுமிருந்தால் (வாழ்நாளில் ஒருமுறையேனும்) மக்காவுக்குச் சென்று ஹஜ்ஜு செய்தல் ஐந்தாவது கடமை.*

### ஈமானின் பர்லுகள் ஆறு

12. கொண்ட ஈமானின் பர்லாறையும்
குறிப்பாய் உரைத்திடக் கேட்டறிவீர்
ஒன்றும் பர்ல் அல்லா தன்னைக் கொண்டு
உகந்தீமான் கொள்ளும் வகையாவது
என்றும் நிலைப்பட்டோன் ஒருவனவன்
இணையும் எதிரொப்பும் நிகரு மில்லான்

உள்ளமை யுள்ளோன் அவன் தனக்கு
ஒடுக்கம் துவக்கமென் றில்லாதவன்
விள்ளலரிதான சிபாத் துள்ளவன்
வியந்த படைப்புகட் கொவ்வாதவன்

உள்ளமைதனில் சிபாத்துகளில்
உரிய நாயகத் தன மதனில்
துல்லிதமான அப் ஆல்களில்
தூயோ ஞெருவஸ்தும் நிகரில்லானே

என்றும் ஹயாத்துள்ளோன் அறிவு நாட்டம்
ஏற்ற குத்றத்து பார்வை கேள்வி
விண்ட திருக்கலாம் உடையநாயன்
வேண்டும் வஸ்தினே அமைக்கவல்லான்
என்றே கல்பினுல் நிண்ணயம் கொண்டு
இருப்ப தீமானின் முதல் பர்லாம்.

***அருஞ்சொல்:-***

*ஒடுக்கம்-முடிவு, விள்ளல்-கூறுதல். சிபாத்து-பண்புகள், நாயகத்தனம்-தலைமைத்துவம், துல்லிதம்-நுணுக்கம். ஹயாத்து-ஜீவன், குத்றத்-சக்தி, விண்ட-ஓதிய, கலாம்-பேச்சு, கல்பு-மனம், நிண்ணயம்-திட்டம்.*

***தெளிவுரை:***

*ஈமானுடைய கடமை ஆறுகும். அவற்றில் முதலாம் பர்லு இறைவனே நம்புதலாகும். அதன் வகையாவது, அவன் என்றும் நிலைபாடானவன். ஒருவன். இணையில்லாதவன். நிகரில்லாதவன், ஒப்பில்லாதவன். உண்மையானவன். முடிவும் துவக்கமும் என்றில்லாதவன், கூறுதற்கரிதான பண்புகள் உள்ளவன். எந்தப் படைப்புக்கும் ஒப்புவமை இல்லாதவன். அவனது உண்மையான தன்மையில், பண்புகளில், உரிய தலைமைத்துவத்தில், தெளிவான செயல்களில், தூய்மையான அவனுக்கு எந்த வஸ்துவும்*

நிகரில்லை. என்றும் உயிருள்ளோன். அறிவு நாட்டம் ஏற்குமான அற்புதத்தன்மை, பார்வை, கேள்வியுடையவன். ஓதுகின்ற திருமறையைத் தனக்கென உடைய நாயன், தான் விரும்பும் வஸ்தினைப் படைக்கும் வல்லமையுடையவன் என்ற விவரங்களை மனதினுல் நிச்சயித்துக் கொண்டிருப்பது ஈமானின் முதலாவது பர்லாகும்.

13. இரண்டாம் பர்லதை விபரமாக
நிகழ்த்தினேன் கேட்டுப்படிப்பீர்களே
படைத்தோன் மலக்குகள் அவனடியார்
படையுணப்பட்டோர் சங்கையானோர்
உடையோன் ஏவல்க்கு மாறு செய்யார்
ஓதி அவன் சொன்ன ஏவல் படி
முடிப்பார் விலகின படிதவிர்வார்
மொழியப் படாதாண்கள் பெண்களென்றும்
தொடுப்பாய் மயல் இச்சை ஊணுமில்லை
துயரும் தாய் தந்தை என்றுமில்லை
என்றே மனதினுல் உண்மை கொள்ளல்
இரண்டாம் பர்லாகும் மூன்ருவது

**அருஞ்சொல்:-**

மலக்குகள்-அமரர்கள், ஏவல்-கட்டளை, மொழியப் படாத-கூறப்படாத.

**தெளிவுரை:-**

ஈமானின் இரண்டாம் கடமையினை விபரமாகக் கூறுகிறேன். மலக்குகள் இறைவனது அடியார்கள். இறை

வனால் படைக்கப்பட்டவர்கள். மேன்மையானவர்கள் இறைவனுடைய ஏவல்களுக்கு எப்பொழுதுமே மாறு செய்யாதவர்கள். அவன் இட்ட கட்டளைப்படி கருமம் ஆற்றுபவர்கள். அவனால் தடுக்கப்பட்ட காரியங்களைத் தவிர்த்துக் கொள்வார்கள். அவர்கள் ஆண் பெண் என்று பால் பாகுபாடு அற்றவர்கள். கலவி மயக்கம், எப்பொருளையும் இச்சித்தல், ஊன், உறக்கம், துயரம், இன்பம் என்று எதுவு மில்லாதவர்கள். அவர்களுக்குத் தாய் தந்தையர் இல்லை. இதனை நாம் மனத்தில் கொள்ள வேண்டும்.

14. ஒன்றான் இறக்கிய வேதம் நாலும்
ஒரு நூறு சுஹுபதுவும் வல்லான்
விண்ட திருக்கலாம் வசன மென்றும்
மேலோன் தாத்துடன் நிலைப்பட்டதாம்
தொண்டா எழுத்துக்கள் தொனியை விட்டும்
தூய்தான தென்றுமே அறிவீர்
அறிவீர் அவைகளுள் பொதிந்த தெல்லாம்
அணுவும் பிசகாமல் உண்மையாகும்
நெறியாம் சுஹுபு நூறதனில் பத்தை
நேசர் நபி ஆதம் தமக்காக் கினான்
குறித்தான் ஐம்பதை ஷீத் அவர்க்கு
கொடுத்தான் இத்ரீசுக் கதில் முப்பதை
புரிப்பாய் இபுருஹீம் நபிக்குப் பத்தை
புகன்றான் சதுமறை வகையைக் கேளீர்.

***அருஞ்சொல்:-***

*ஒன்றான்-ஒருமையானவன், சுஹுபு - கட்டளைகள், விண்ட-கூறிய, நெறி-வழி.*

**தெளிவுரை:-**

ஏகனுகிய இறைவன் அருளிய நான்கு வேதங்களும். நூறு சுஹுபுகளும் வல்ல நாயனிடத்திலிருந்து வந்தவை என ஒப்புக்கொள்ள வேண்டும். இது இறைவனுடைய 'தாத்' துடன் நிலேப்பட்டதாம். அவை எழுத்து மூலமன்றி தொனியினுல் மொழியப்பட்டவை, தூய்தானவை என்று அறிவீர். மேலும் வேதம் சுஹுபுகளில் அடங்கி இருப் பவை யெல்லாம் அணுவத்தனேயும் தவருத உண்மை யாகும்.

ஸுஹுபுகளில் ஆதம் நபி (அலே) அவர்கட்கு பத்தும் ஷீது நபி (அலே) அவர்கட்கு ஐம்பதும் இத்ரீஸ் நபி அவர் களுக்கு முப்பதும், இப்ருஹீம் நபி அவர்களுக்கு பத்தும் அருளினுன். நான்கு வேதங்களேயும் அருளியவாற்றை (அடுத்த பாட்டில்) இனிக் கேட்போம்.

**விளக்கம்:-**

மூஸா நபிக்கு ஸுஹுபுகள் பத்தும், தௌருத் வேத மும் அருளப்பட்டன. ஆதலால் ஸுஹுபுகள் 110 என்பது இந்தப் பத்தையும் சேர்த்தாகும், இந்த ஸுஹுபுகள் தௌருத் வேதத்தோடு இணேந்துவிட்டதால் இதனேத் தவிர்த்து 100 சுஹுபுகள் என்பதே பெருவழக்காகும்.

15. முந்த முதல் வேதம் தௌருத்ததை
மூஸா நபிக் கீந்தான் அப்ரானியால்
நந்தும் ஸபூர் வேதம் தாவூதென்னும்
நபிக்கு நல்கினுன் யூனுனியால்
அந்த இன்ஜீலே யீசா நபிக்கு
அருளினுன் சுர்யா னிப்பாஷையால்
விந்தை புர்கானே அறபால் எங்கள்
வேந்தர் முஹம்மதர்க் கருளினுனே.

விந்தை புர்கானைத் தவிர மற்றும்
வேதம் ஸுஹுபுக ளெல்லாத்தையும்
சந்தாபமின்றி மாற்றி வைத்தான்
சங்கை புர்கானை கியாமம் மட்டும்
அந்த மறை மாற்றப்படா தெனவும்
அறிந்தே கல்பினுல் உண்மை கொள்ளல்
சிந்தை ஈமானின் பர்லு மூன்றும்
சேரும் பர்லு நாலாவதைக் கேள்.

**அருஞ்சொல்:-**

ஈந்தான்-கொடுத்தான், விந்தை-புதுமை, சந்தாபம்-துன்பம், கியாமத்-இறுதிநாள், கல்பு-மனம், சிந்தை-மனம்.

**தெளிவுரை:**

முதன் முதலில் மூஸா நபிக்கு தௌறாத் வேதத்தை அப்ரானீ (ஹீப்ரு)ப்பாஷையிலும், தாவூத் நபிக்கு சபூர் வேதத்தை யூனானீ (கிரேக்க) பாஷையிலும், ஈஸா நபிக்கு இன்ஜீல் வேதத்தை சுர்யானீ (சிரியா) பாஷையிலும். முஹம்மது நபி (ஸல்) அவர்களுக்கு புர்கான் வேதத்தை அறபு மொழியிலும் அருளினுன். புதுமையான புர்கான் வேதத்தைத் தவிர, மற்றும் வேதங்களையும் சுஹுபுகளை யும் நடைமுறையிலின்றி மாற்றிவைத்தான். சிறப்புத் தங்கிய புர்கான் வேதத்தை கியாமம் மட்டும் மாற்றப் படாமலாக்கினுன். இதனை அறிந்து மனத்தினுல் உறுதி கொள்ளல் ஈமானின் மூன்றுவது கடமையாகும். நான்கா வது பர்லை அடுத்துக் கேளுங்கள்.

16. சங்கை நபிமார்கள் அடியார்கள்க்கு
தக்கோன் வரவிட்ட தூதர்களாம்
பங்கப் பழிப்புகள் வடுக்களில்லார்
பாவமொரு போதும் செய்தறியார்

எங்கோனிடத்தினில் விசுவாசராம்
இவர்கள் மொழியெல்லாம் உண்மையாகும்
அங்கம் ஹஸதன்றி அடியார்கள்க்கு
அல்லா ஏவல் போல் அறிவிப்பாரே

லட்சத்திருபத்தி நாலாயிரம்
நிறைந்த நபிமார்கள் அவர்களதில்
பட்சமுள றஸூல் மார் முன்னூற்றி
பதினைந்து பேர்க ளென் றுமிதில்
அச்சமுள உலுல் அஸ்மி என்போர்
ஆறு பேராகும் இவர்கட்கெல்லாம்
மெச்சு புகழ் நாதர் நம்மிறஸூல்
வேதர் முஹம்மது நபியுல்லாவே
இந்தப்படி கல்பால் உண்மை கொள்ளல்
ஈமான் பர்லதில் நாலாவதாம்.

***அருஞ்சொல்:-***

*வடு-குற்றம், எங்கோன்-எம்இறைவன், உலுல்அஸ்மி -திடசித்தமுடையோர், றஸூல்-திருத்தூதர்*

***தெளிவுரை:-***

*சிறப்புத்தங்கிய நபிமார்கள் இறைவனுடைய தூதர்களாய் நின்று அடியார்களுக்கு உபதேசிப்பார்கள். அந்நபிமார்கள் எந்தக் குறைபாடும் அற்றவர்கள். பழிப்புக்கு இடமில்லாதவர்கள். குற்றங்கள் அற்றவர்கள். ஒருபோதும் பாவம் செய்யாதவர்கள். இவர்கள் பேசுவதெல்லாம் உண்மையேயாகும். சிறிதும் பொருமையற்றவர்கள் அடியார்களுக்கு இறைவனுடைய ஏவல்களை அறிவிப்பார்*

கள். ஒரு இலட்சத்தி இருபத்தி நாலாயிரம் நபிமார்கள் உலகில் தோன்றியுள்ளார்கள். அவர்களில் றஸூல்மார் முன்னூற்றிப் பதினைந்து பேர்களாவர். இவர்களில் இறைவன் பால் பயபக்தியுடையோராய் துன்பங்களை அனுபவித்தவர்கள் அறுவராவர். இவர்களுள் மிகச் சிறப்புத் தங்கியவர்கள் புர்கான் வேதத்தையுடைய நபி (ஸல்) ஆவார்கள். இவ்வாறு நம்பிக்கை கொள்வது ஈமானின் நான்காவது கடமையாகும்.

**விளக்கம்:**

## நபிமார் றஸூல்மாரின் சிபத்துக்கள்

உண்மை, விசுவாசம், கூரியபுத்தி, பிரச்சாரம் எனும் நான்கும் அமைவதும் இதற்கெதிரான பண்புகளான பொய், மோசடி, மழுங்கியபுத்தி, அருளப்பட்டதை மறைத்தல் என்பன அமையாதிருப்பதும் றஸூல்மாரின் பண்புகளாகும். பிரச்சாரம் அருளப்பட்டதை மறைத்தல் என்பன தவிர்ந்த மூன்றும் அதன் எதிர்ப் பண்புகளும் நபிமாருக்குரிய பண்புகளாகும்.

## உலுல் அஸ்மி

இதன் பொருள் திடமனதுள்ளோர் என்பதாகும். இவர்கள் இறைவனால் மிகவும் சோதிக்கப்பட்டும் நிலைகுலையாத கொள்கைப் பிடிப்புள்ளோராவர். இவர்கள் அறுவரும் வருமாறு:- ஆதம் நபி (அலை) நூஹு நபி (அலை) இப்ருஹீம் நபி (அலை) மூஸா நபி (அலை) ஈஸா நபி (அலை) முஹம்மது நபி (ஸல்). ஐவர் என்பாரும் உளர்.

## நபிமார்

நபிமார் 21 பேரினதும் வேதங்கள் அருளப்பெற்ற றஸூல்மார் 4 பேரினதும் பெயர்களே திருகுர்ஆனில் தரப் பட்டுள்ளன.

17. விந்தையுடன் ஐந்தாம் பர்லாவது
வீணும் துன்யா விட்டிறந்த பின்னே
பிந்தி வரும் கடை நாள் உண்டென்றும்
பிசகாமல் முன்கர் நகீருண்டென்றும்
அந்தக் கப்றினில் சுகம் அதாபும்
அமரர் கேள்விகள் உண்டெனவும்

நிரப்பமாகிய நன்மை தீமை
நிறுக்கும் தராசுமீசான் உண்டென்றும்
சிருதுல் முஸ்தகீம் பாலமது
சிறப்பாய் உண்டென்றும் அந்த நாளில்
இறையோன் மாண்டோரைப் பண்டு போல
எழுப்பிக் கணக்குகள் கேள்வி கேட்டு
குறிப்பாய் நலவோரை அவன் வருசை
கொண்டு சுவர்க் கத்தில் விடுவானென்றுப்

இழைத்த பாவிகள் தனை நீதம் கொண்
டெரியும் நரகத்தில் சுடுவானென்றும்
அழுத்த மனதினுல் உண்மை கொள்ளல்
ஐந்தாம் பர்லாகும் ஆருவது.

*அருஞ்சொல்:-*

*விந்தை-புதுமை, துன்யா-உலகம், அதாபு-வேதனை கப்று-புதைகுழி, மீஸான்-தராசு, பண்டு-பழைய.*

*தெளிவுரை:-*

*இஸ்லாத்தின் ஐந்தாம் பர்லாவது : அற்பமான இந்த உலகை விட்டும் நாம் இறந்துபோன பின்னர் கபுறில்*

முன்கர், நகீர் எனும் மலக்குகள் கேள்வி கேட்பார்கள். நேரான பதில் சொன்னவர்களுக்கு சுகமும், விடை சொல் லாதவர்களுக்கு வேதனையும் உண்டு. அதன்பின் உலக முடிவு நாள் ஒன்றுண்டு. அப்போது நாம் செய்த நன்மை தீமைகளை சிறப்பாக நிறுத்தறியும் தராசில் வைத்து நிறுக் கப்படும். அதன்பின் சிறுதுல் முஸ்தகீம் என்னும் பாலத்தைக் கடக்க வேண்டும். பின்னர் எல்லோரையும் மஹ்ஷர் வெளியில் கொண்டு வந்து கேள்வி கணக்குகள் கேட்கப்படும். அதில் நன்மை செய்தவர்களை சுவர்க்கத் திலும், தீமை செய்தவர்களை நரகத்திலும் புகுதச் செய்யப் படும். இதனை மனத்தில் அழுத்தமாக நம்பவேண்டும்.

18. எழுத்தின்படி வரும் விதிகளெல்லாம்
ஏகன் களாவும் கற்பனையுமாகும்
அழிக்கும் கல்கதைப் படைக்கு முன்னே
அமைத்தான் நலவையும் தீங்கையுமே
கத்தன் கற்பித்ததே உண்டாகும்
கற்பியாததுண்டாகா தென்றும்
சித்தமுள நன்மைக் குகயமென்றும்
தீமைக்குகயம் தானில்லை யென்றும்
சுத்தமுடன் கல்பால் உண்மை கொள்ளல்
தூயோன் ஈமானின் பர்லாறுமே.

**அருஞ்சொல்:-**

கல்பு-படைப்பு, உகயம்-விருப்பம், கல்பு-மனம்

**தெளிவுரை:-**

லவ்ஹுல் மஹ்பூல் பலகையில் எழுதப்பட்டதன் படி ஒருவருடைய விதி அமைப்பெல்லாம் இறைவனால் வகுக்கப் பட்ட நிர்ணயமும் கற்பனையுமாகும். ஓர் ஆத்மாவைப்

படைக்குமுன்னர் அது அதற்குரிய நன்மையையும், தீமையையும் இறைவன் கற்பனைக் கொண்டு எழுதியுள்ளமை உண்மையாகும். அவனால் கற்பியாதது ஒருவருக்கு உண்டாகாது. அறிவு சார்ந்தவாறு இறைவன் ஒருவருக்கு நன்மையே விளைய வேண்டுமென்று விரும்புகிறான். தீமையை அவன் விரும்பவில்லை. இதனை பரிசுத்தமாக மனத்தால் உண்மை கொள்ளல் தூய்தாகிய ஈமானின் ஆறாவது பர்லாகும்.

## தௌஹீதின் பர்லுகள்

19. வெற்றி தரும் தௌஹீதின் பர்லை
விரிவாய் உரைக்கின்றேன் அறிவீர்களே
தக்கோன் உள்ளமை தன்னைக் கொண்டே
தனியே தானாக நிலைப்பட்டவன்
சிக்காம் படைப்புகள் யாதொன்றையும்
தேவை இல்லாதோ னவனைக் கொண்டே
ஒக்க கல்கெல்லாம் நிற்குதென்றும்
உடையோன் ஹுவியத்து இல்லாவிட்டால்
சக்கின்றி ஒன்றும் இல்லை யென்றும்
தானே அறிவது முதல் பர்லே

***அருஞ்சொல்:-***

*தௌஹீத் - ஏகத்துவம். தக்கோன் - இறைவன், ஹுவியத்-ஒருமைத்துவம், சக்கின்றி-சந்தேகமின்றி.*

***தெளிவுரை:***

*மனித ஆன்மாவுக்கு வெற்றியைத்தரக்கூடிய ஏகத்துவத்தின் கட்டாயக் கடமையை விரிவாகக் கூறுகிறேன்*

கேளுங்கள். இறைவன் தன்னைக் கொண்டு தானே நிலைப் படுபவன். படைப்பினங்கள் எதுவும் அவனுக்குத் தேவை யில்லை. அவன் தேவையற்றவன். அவனுடைய ஒருமைத் துவத்தை ஆதாரமாகக் கொண்டே எல்லா உயிரினங்களும் நிற்கின்றன. அந்த ஒருமைப்பாட்டின் ஆதாரம் இல்லை யாயின் சந்தேகமின்றி இவ்வுலகில் ஒன்றுமே இல்லை. இதை அறிவது தௌஹீதின் முதற் கடமையாகும்.

20. மன்னுன் சிபாத்துகள் ஹயாத்தறிவு
வலிமை திருக்கலாம் பார்வை கேள்வி
உன்னும் திருநாட்டம் இவைகளெல்லாம்
உள்ளமைதனில் அவனுக் கேயாம்
மின்னும் மனிதர்க்கும் இக்குணங்கள்
வெளியிலிருந்தாலும் உள்ளில் இல்லை
இன்னும் அறிந்திடும் விளக் கெரிந்தால்
இலங்கும் வீடெல்லாம், மறந்தாலில்லை
இல்லை முன்சொன்ன இயல் பொன்றுக்கும்
இறைக்கு மட்டுமே தனதாமென்ன
நல்லாயுணர்வது தௌஹீததின்
இரண்டாம் பர்லாகும் மூன்ருவது.

***அருஞ்சொல்:-***

*மன்னுன்-இறைவன், சிபாத்துக்கள் - பண்புகள், ஹயாத்து-ஜீவிதம், கலாம்-பேச்சு, நாட்டம்-எண்ணம்.*

***தெளிவுரை:-***

*உயிர்த்தல், அறிவு, வல்லமை, கேள்வி, பார்வை, நாட்டம் முதலியனவெல்லாம் இறைவனின் பண்புகளாகும்.*

இவை உள்ளார்ந்த நிலையில் இறைவன் ஒருவனுக்கே உரியன. இக்குணங்கள் வெளிப்படையான நிலையில் மனி தருக்கும் உண்டு. இவ்விரண்டின் வித்தியாசங்களை உணர் வது தௌஹீதின் இரண்டாம் பர்லாகும்.

ஒரு வீட்டின் உள்ளே விளக்கு எரிந்தால் வீடெல்லாம் ஒளிபரவும். விளக்கில்லையேல் வீடெல்லாம் இருள் மண்டிக் கிடக்கும். இது போல இறைவனுடைய பண்புகளை நாம் உள்ளத்தில் உணர்வோமாயின் உள்ளமெல்லாம் பிரகா சிக்கும், இல்லாவிட்டால் உள்ளம் இருண்டுவிடும்.

**விளக்கம்:**

இறைவனுக்கு உள்ளார்ந்த நிலையில் அமைந்த பண்பு கள் மனிதருக்கு வெளிப்படையாக அமைந்துள்ளன. இது எவ்வாறெனில், உயிர்த்தல், பார்வை, கேள்வி, அறிவு, வலிமை, பேச்சு, நாட்டம் என்பன பொதுவாக மனிதருக் கும் உள்ளன. இறைவனுக்கும் உள்ளன. இரண்டுக்கும் ஆழமான வேறுபாடு உண்டு. மனிதனுக்கு உயிர்ப்பு உண்டு. ஆனல் ஒரு நாள் இவன் இறந்துபோவான். இறைவன் என்றுமே இறவாதவன். மனிதன் கண் எட்டிய தூரம் பார்ப்பான். இறைவனுடைய பார்வைக்கு இப்படி யொரு எல்லை கிடையாது. மனிதன் ஒருவன் சொல்வதைக் கேட்கிறுன். இறைவன் உலகம் முழுவதும் சொல்வதை எப்பொழுதும் கேட்டுக் கொண்டிருக்கிறுன். மனித னுடைய சிற்றறிவு அவனுடைய அனுபவத்திற்கும் விவேகத்திற்கும் ஏற்ப இவன் அறிகிறுன். ஆனல் இறைவன் மூன்று காலத்தையும் உணர்ந்து எல்லை இல்லாத பூரண அறிவுள்ளவன். இவைபோல வலிமை, கேள்வி, நாட்டம் என்பனவும் வேறுபட்டு நிற்கும்.

21. வல்லான் நாயகத் தனத்தி லொரு
வஸ்தும் கூட்டில்லை நிகருமில்லை
எல்லாம் படைத்தவன் அவனே இறை
இலாஹுல் முத்லகும் அவனேயாகும்

அடியார் முயல் கின்ற வணக்கங்கள்க்கு
அவனே பாத்திர வானல் லாமல்
நெடிதாம் குருக்கொண்டோன் மாதா பிதா
நிசமாய் நாயனென்றுரைத்திட்டாலும்
படியில் கதிர்மதி மீன் சிலைகள்
பலதையும் நாய னென்றுரைத்து
கொடியோர் பணிந்தாலும் வீணு மதற்
குரிய நாயகத் தனமில்லையே

சிலைகள் பலதையும் நாயனென்றே
சிலர்கள் பணிந்ததால் உள்ளமையில்
விலகா துண்மையாய் வணங்கப்பட்டோன்
வேறில்லை அல்லாவே ஒழிய
எனவே அறிவது பர்லு மூன்றும்
இயம்பவே நாலாம் பர்லாவது.

***அருஞ்சொல்:-***

*நாயகத்தனம் - தலைமைத்துவம், வஸ்து - பொருள், இலாஹுல்முத்லக்-முற்றான பூரண இறைவன், படி-பூமி, கதிர்-சூரியன், மதி-சந்திரன், மீன்-நட்சத்திரம், கொடிய-தீய,*

**தெளிவுரை:-**

வல்ல இறைவனது இயல்பில் ஒரு சிறிய அம்சமும் பிற பொருள்களில் இருந்து சேர்மானமாக இல்லை. அவன் எதற்கும் நிகரானவனுமில்லை. உலகம் முழுவதையும் படைத்தவன் அவனேயன்றி வேறு யாருமில்லை. முற்றான பூரண இறைவனும் அவனே. அடியார்களின் வணக்கத்திற்குரிய ஆண்டவனும் அவனே. பெரிய குருவழியைப் பின்பற்றும் ஒருவன், மாதாவையும் பிதாவையும் இறைவனென்றும் கூறினாலும், பூமியிலுள்ள சூரியன், சந்திரன், நட்சத்திரம், மற்றும் வடிவமைக்கப்பட்ட சிலைகள் ஆகியனவற்றையெல்லாம் நாயனென்று கூறினாலும், கொடியவர்களான அறிவிலிகள், அவற்றை இறைவனென்று வழிபட்டாலும், அவையெல்லாம் வீணான செயல்களாகும். அக்கொடிய சிலைகளில் இறை இயல்பு இல்லை. இறைவனை அவனது ஏகத்துவத்தன்மையிலிருந்து விலகாமல் வணங்குவோமேயானால் அதுவே அல்லாஹ்வை வணங்குவதாகும். இவை அறிவது தௌஹீதின் மூன்றாம் பாலாகும்.

22. தனியோன் செயல்களில் அவனுக்கு வேறு
சரிசமானம் கூட்டில்லையென்றே
ஆலம் தனிலுள்ள செயல்களெல்லாம்
அவன் கற்பனைகொண்டும் களா
கொண்டுமாம்
கோல நலவுகள் தீங்கை முன்னால்
கத்தோன் அமைத்ததை விபரமாக்கி
சீல மனிதர்க்கே இகுத்தியாரும்
தெரியும் அக்லும் ஈந்தான் ஆனதால்

கூலி அவரவர் அமல் படியே
கொடுப்பதும் இந்தப்பொருத்தத்துக்கே
படைப்போன், அமைப்பவன், இரண மீவோன்
பலர்க்கும் நலம் தீதீவோன் யாதொன்றை

ஒடுக்குவோன் உசும்புதலாக்கு வோன்
உள்ளமை தனில் அவனே என்ன
திடத்த மனத்திஞல் உற்றறிதல்
சிறந்த தௌஹீதின் பர்லு நாலாம்.

*அருஞ்சொல்:-*

*ஆலம்-அகில உலகம், கோல-அழகிய, கத்தோன்-இறைவன், இக்தியார்-முடிவுசெய்யும் சுதந்திரம், அக்ல்-புத்தி, ஈந்ததஞல்-கொடுத்ததஞல், அமல்-வணக்கம், இரணம்-உணவு.*

*தெளிவுரை:-*

*இறைவன் தனித்துவமானவன், அவனுடைய செயல்களில் வேறு எவரும் அவனுக்குச் சரிசமானமோ, கூட்டோ இல்லை. உலகத்திலுள்ள நிகழ்வுகள் யாவும் அவனது கற்பனையைக் கொண்டும், நிர்ணயத்தைக் கொண்டும் உண்டானவை. அழகிய நன்மைகள், மற்றும் தீமைகளெல்லாம் முன்ஞளில் இறைவஞல் அமைத்து நிர்ணயிக்கப்பட்டவை. இதை மனிதர்களுக்கு விபரமாக எடுத்துக்கூறும் முகமாக, பண்புள்ள மனிதர்களுக்கு தீர்மானிக்கும் சுதந்திரத்தையும், தெளிவாகக்கூடிய அறிவையுங் கொடுத்துள்ளான். ஒவ்வொருவரும் செய்யும் வணக்கங்களுக்கேற்ப பிரதிபலனை அவர்கள் பெற்றுக்கொள்வார்கள். இந்தப் பொருத்தத்துக்கே இறைவன் மனிதனுக்கு இஃதியாரையும், அக்லையும் கொடுத்தான். இறைவன் படைத்தளிப்போஞகவும், நியதிகளை அமைப்பவஞவும், உணவளிப்போஞகவும், அவரவர் செயலுக்கேற்ப நன்மையையும் தீமையையும் வழங்குவோஞகவும் மற்றும் உலகை அடக்கியாள்வோஞகவும் உயிர்ப்பிப்போஞகவும் விளங்குகிருன்.*

உண்மையில் இறைவன் ஒருவனே என்பதை மனத்தில் திடமாக நம்புதல் சிறப்பான தௌஹீதின் நான்காம் பர்லாகும்.

## மஹ்ரிபாவின் பர்லுகள்

23. அடுத்த மஹ்ரிபா வின்பறுலே
அருளக் கேள் அகப்பார்வை கொண்டு
வல்லோன் திருதாத் துள்ளமை கொண்டு
வன்னிக்கப்பட்டோன் ஒருவன் முன்னே

இல்லாதிருந் துண்டா னதுவுமல்ல
இனிமேல் இல்லாமல் போவதல்ல
குல்லாம் படைப்பொன்றைப் போலுமல்ல
கூடி அதுகளில் கலந்தோனல்ல
எல்லாம் அவனைவிட் டகன்ற தல்ல
எங்கும் நிறைந்தோனென்றறிந்து கொள்ளே

ஆதாரமில்லா அணுக்கள் கண்டிப்
பானதைக் கொண்டு நிற்குமாப்போல்
யாதொன்றைக் கொண்டும் நிற்போனல்ல
நாயன் தனியேதானாய் நிற்பவன்
ஓதும் வாடைகள் நிறங்களில்லை
ஓரிடமென்று தானுமில்லை
போதும் காலமென்றவனுக்கில்லை
புரிவாமுறுப்புகள் ஒன்றுமில்லை

சோதி உள்ளமை சரீரமில்லை
தோன்றும் கண்டிப்புத்தானுமில்லை
ஓதவரிதான சிபாத்துகள் கொண்டு
உடையோன் வன்னிக்கப்பட்டோனென்றே
போத மனத்தினுல் உற்றறிதல்
புகலும் மஹரிபா முதல் பர்லாம்

***அருஞ்சொல்:-***

*மஹரிபா-இறைஞானம், வன்னித்தல்-விபரித்தல், குல்-எல்லாம், ஓதும்-கூறும், சோதி-ஒளி, புகல்-கூறும்.*

***தெளிவுரை:-***

*அடுத்து மஹரிபாவின் கடமையினைக் கூறுகிறேன், கேளுங்கள்: இறைவனை மனத்தினுல் பார்க்கின்ற பார்வை கொண்டும் அவனைப்பற்றிய தெளிவான உண்மையைக் கொண்டும் உணரப்படவேண்டும். விபரிக்கப்படுபவனுகிய அவன் முன்னர் இல்லாதிருந்ததுமில்லை. பின்னர் ஆனது மில்லை. இனிமேல் இல்லாமற் போகிறவனுமில்லை. எந்தப் படைப்பைப் போலும் அவன் இல்லை, உள்ளதாகிய ஒன்றில் சேர்மானமானவனுமில்லை. எதுவும் அவனை விட்டு அகன்றதுமில்லை. எங்கும் பிரம்மமாக நிறைந்தவன் என்று அறிந்து கொள்ளுங்கள்.*

*எவ்வித ஆதாரமுமில்லாது நின்றியங்கும் அணுக்க ளானவை முன்னர் கண்டிப்பான ஒரு பொருளிலிருந்து பிரிந்தவை. பின்னர் கண்டிப்பான ஒரு பொருளாக மாறு பவை. இறைவன் அவ்வாறு எதனையும் ஆதாரமாகக் கொண்டவனில்லை. அவன் தனித்தவனுய், தானே ஒரு வனுய் நிற்பவன். அவனிடம் எந்த மணமும் இல்லை. நிறமு*

*மில்லை. அவன் ஓரிடத்தில் தங்கி நிற்பவனுமில்லை. அவன் முக்காலங்களில் எதனையும் சேர்ந்தவனுமில்லை. எல்லாக் காலத்திற்கும் பொதுவானவன். அவன் இயங்குவதற்கு மனிதனைப் போல எந்த உறுப்பையும் உடையவனில்லை. சரீரமுடையவனுமில்லை. ஒளிமயமானவன். ஸ்தூலமான எந்தப் பொருளாகவும் இல்லை. அவனைப் பற்றிக் கூறுதற்கரிதான பண்புகளைக் கொண்டும் விபரிக்கப்பட்டவன். மயக்கம் தரும் மனத்தினால் இதனை உற்றறிதல் மஹ்ரிபாவின் முதல் பர்லாம்.*

**24.** நீதமுடன் ரெண்டாம் பர்லு தன்னை
நிகழ்த்தக் கேளுங்கள் நெறியுள்ளோரே
அழியா ஹயாத்துக்கொண்டே பெரியோன்
அல்லா ஹயாத்துள்ளோன் றூஹாலில்லை
தெளிவாம் அறிவு கொண்டே அறிந்தோன்
சிந்தை தனிலுற்ற பாங்கா லல்ல
நழுவா நாட்டம் கொண்டே நாடுவோன்
நம்மைப் போல் மனம் கொண்டுமல்ல
வெளியாம் வலிமை கொண்டே வலுத்தோன்
வேறோர் உறுப்புகள் கொண்டுமல்ல

ஒளிவாம் பார்வை கொண்டே பார்ப்பவன்
உற்றபடைப்பைப் போல் கண்கொண்டல்ல
வழுவா கேள்விகொண்டே கேள்ப்பவன்
மனிதர் தனைப்போல செவிகொண்டல்ல

மொழியாம் பேச்சுக் கொண்டே பேசுவோன்
மூடித்திறக்கும் வாய் நாவாலல்ல
அழகாய் இவ்விதம் தேர்ந்தறிதல்
அந்த மஹரிபா பர்லுரெண்டே.

**அருஞ்சொல்;-**

*நீதம்-நியாயம், நெறியுள்ளோர்-தீன்வழியில் நடப்போர், ஹயாத்து-ஜீவன், றூஹு-உயிர், நமுவாத-விலகாத, தேர்ந்து-தெளிவு பெற்று.*

**தெளிவுரை-:**

*மஹரிபாவின் இரண்டாம் கடமையினை நன்னெறியில் வாழ்வோருக்காக எடுத்துக் கூறுகிறேன். கேளுங்கள். என்றும் இறப்பில்லாத ஜீவனைக் கொண்டவன் பெரியோனாகிய அல்லாஹ். அந்த ஜீவன் நம்மைப் போன்ற உயிரைக் கொண்டில்லை. தெளிவான அறிவு கொண்டே அறிபவன். நம் போன்று மனத்தால் அல்லது சிந்தையால் அவ்வறிவு வெளியாவதில்லை. நெகிழ்ச்சியில்லாத நாட்டம் கொண்டு நாடுபவன். அது நம்போன்று மனத்திலல்ல. வெளியாகி நிற்கின்ற வலிமையைக் கொண்டும் வலுப்பமுடையவன். அந்த வலிமை எந்த உறுப்புகளைக் கொண்டுமில்லை. பிரகாசமான பார்வையைக் கொண்டு பார்ப்பவன், உற்றதாகிய உலகப்படைப்பைப் போல் கண்ணினால் பார்ப்பவனில்லை. மொழியாகிய பேச்சையுடையவன். அப்பேச்சு மூடித்திறக்கும் வாயாலும் நாவாலுமில்லை. இவ்விதம் இறைவனைத் தெரிந்து கொள்ளுதல் மஹரிபாவின் இரண்டாம் கடமையாகும்.*

**விளக்கம்:-**

*முன்னர் தௌஹீதின் பர்லுகள் கூறுமிடத்து, வலிமை கலாம், பார்வை, கேள்வி, நாட்டம், இவைகள் எல்லாம்*

இறைவனுக்கு உள்ளார்ந்ததாகவும், மனிதருக்கு வெளிப்படையாகவும் அமைந்துள்ளன என்று விளக்கப்பட்டது. இங்கே அவ்வாறான பண்புகள் இறைவனுக்கு இருந்தாலும் அவை நம்போன்ற உறுப்புகளைக் கொண்டும் இல்லை. அவை நமக்கு ஸ்தூலமாகவும், இறைவனுக்கு சூக்குமமாகவும் அமைந்திருக்கின்றன என்று இங்கே விளக்கப்பட்டது.

25. ஆக்கி அழிப்பவன் இரணமீவோன்
அன்பாம் ஹயாத்தீவோன் மௌத்தாக்கு வோன்
சேர்க்கும் நேர்வழி காட்டு விப்போன்
சிலரை வழி தப்ப வைக்கிறவன்
ஆர்க்கும் சுகமீவோன் நோவு செய்வோன்
அதுபோல் நடக்கின்ற செயல்க ளெல்லாம்
காக்கும் இறையவன் செயலே என்ன
கல்பாலறிவது பர்லு மூன்றும்.

***தெளிவுரை:-***

*ஒன்றை ஆக்குபவன், அதனை அழிப்பவன், உணவு தருபவன், இரக்கத்தோடு ஜீவனை அளிப்பவன், காலம் வந்தவுடன் உயிர் துறக்கச் செய்பவன். நேரானவர்களுக்கு நேர்வழி காட்டுபவன். வழி தவறியோரை வழி தவறச் செய்பவன். நல்லடியார்களுக்கு சுகம் தருபவன். தீயோர்களுக்கு நோவினை செய்பவன், உலகம் முழுமையும் பாதுகாக்கின்றவன், ஆகிய இறைவனுடைய இச்செயல்களை மனதில் எண்ணி அறிவது மஹரிபாவின் மூன்றும் பர்லாகும்.*

*மஹரிபாவின் பர்லுகளில் இறைவனின் அப்ஆல்கள் பற்றிக் கூறப்பட்டது. அந்த அப்ஆல்கள்-செயல்கள் இந்தப்*

பாவில் விபரிக்கப்பட்டன. இங்கே குறிப்பிட்ட செயல்கள் மனித சக்திக்கும், அறிவுக்கும் அப்பாற்பட்டவை. இதன் முழு அதிகாரமும் செயலாற்றலும் இறைவனுக்கே உண்டு. அதை அறிந்து உணர்ந்து வழிபடுவது ஞானவழி செல்ப வர்களுக்கு கடமையாகும்.

26. நாலாம் பர்லதை நவிலக் கேளும்
நல்ல முஹம்மது நபியுல்லாதாம்
மேலாம் அறபுனில் குறைஷிக்குல
வேந்தர் ஹாஷிமி கிளையிலுள்ளோர்
சீல குணமானோர் சிகப்புச் சேர்ந்த
சிறக்கும் தெளிவான வெண்ணிறத்தார்
ஆல நபிமார்கள்க் கரசரானோர்
உண்மை காத்திமுல் அன்பியாவே

பாரமக்கத்தில் பிறந்து நபிப்
பட்டம் தரித்தபின் மதீனா நகர்
ஆரமுட னேகிப் பின் வபாத்தாய்
அங்கே அடங்கப் பட்டார்களென்றும்
ஆரும் புகழ் நபி சொன்ன தெல்லாம்
அணுவும் பிசகாமல் உண்மையென்றும்
சேரும் கப்றினில் முன்கர், நகீர்,
சேர்ந்து மையித்தைக் கேட்பாரென்றும்

இன்னும் நலவோர்க்குக் கப்றில் இன்பம்
என்றும் பாவிக்குத் துன்பமென்றும்
மன்னன் கப்றை விட்டு எல்லோரையும்
வல்லோன் எழுப்பியே கேட்பானென்றும்

திண்ணமான மீசான் உண்டு என்றும்
சிருத்துல் முஸ்தகீம் பாலமது
நிண்ணயம் என்றும் இது போல் நபி
நிகழ்த்தும் வகையெல்லாம் உண்மை என்றும்

இயன்றே அறிவது மஹ்ரிபத்தின்
இனிய பர்லு நாலாவதாகும்.

**அருஞ்சொல்:-**

நவில-கூற, சீலம்-சிறந்த, ஆலம்-சர்வஉலகம், காத்திமுல் அன்பியா-இறுதிநபி, வபாத்-இறப்பு, கப்று-புதைகுழி, மன்ஞன்-இறைவன், மீசான்-தராசு, நிண்ணயம்-நிச்சயம்.

**தெளிவுரை:-**

மஹ்ரிபாவின் நான்காவது கடமையினைக் கூறக் கேளுங்கள். சிறப்புத் தங்கிய முஹம்மது நபி (ஸல்) அவர்கள் உயர்ந்த அறபு நாட்டிலே குறைஷிக் குலத்தில் ஹாஷிம் கிளையில் பிறந்தார்கள். மிக்க நற்குணம்உடையவர்கள். சிவப்புச் சேர்ந்த தெளிவுமிகு வெண்ணிறமானவர்கள். உலகில் தோன்றிய நபிமார் அனைவர்க்கும் அரசரானவர்கள். உண்மைமிகு இறுதிநபியுமானவர்கள். பெறுமானம்மிக்க மக்காவில் பிறந்த நபியவர்கள் (நாற்பதாவது வயதில்) நபிப்பட்டம் பெற்றபின் அந்நகரைவிட்டு நீங்கி மதீனநகர் சென்றடைந்து அங்கே வபாத்தாகி அடக்கம் செய்யப்பட்டார்கள்.

எவரும் புகழ்தற்குரிய நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியவையெல்லாம் அணுவத்தனையும் மாறுபடாத உண்மைகளாம். நாம் இறுதியாகச் சேரும் இடமான கப்றின் தலத்தில்,முன்கர் நகீர் என்ற மலக்குகள்

மௌத்தானவரிடம் கேள்விகள் கேட்பார்கள். அவ்வாறு கேட்கும்போது நன்மை செய்தார்க்கு அவை இன்பமாக அமையும். பாவிகளான தீயோர்க்கு அவை துன்பமாக அமையும். பின்னர் இறைவன் மனிதர்களை கப்றை விட்டும் எழுப்பிக் கேள்விக் கணக்குகள் கேட்பான். அவரவர் நன்மை தீமைகளை நிறுக்கும் தராசியில் நிறுக்கப்படும். நரகின் மேல் இடப்பட்ட வாளினும் கூரிய மயிரினும் நேரிய 'சிறுதுல்முஸ்தகீம்' பாலத்தில் இவர்கள் நடந்து செல்லவேண்டி இருக்கும். இவற்றையெல்லாம் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் எமக்குக் கூறிவைத்தார்கள். இவை அனைத்தும் உண்மையென்று அறிந்து ஈமான் கொள்வது மஹ்ரிபாவின் இனிய நான்காவது பர்லாகும்.

## முடிவு

27. நன்றும் மஹ்ரிபா வின் பர்லு
நாலும் கலிமாவின் பர்ல துதான்
விண்ட வகைகளை அறிந்த பேர்கள்
மேலோ னிடத்தினில் முஸ்லிமாகும்
கண்டோர் அவர்கள் செய்யும் தவங்கள்
கத்தனிடத்தினில் கபூலாகுமே

இந்த வகைதனை அறியாத பேர்க்(கு)
ஈடேற்றம் கிடையாது நாளை
சொந்த முஸ்லிமா ஞேரெல்லோரும்
தூய தீன்வகை தனைப்படித்து
அந்தப்படி வல்லானைப் பணிந்து
அமல்களும் செய்து கபூலாகிய
முந்தும் சுவர்க்கத்தில் நல்லோருடன்
முடுகி வாழ்கவே ஆமீன், ஆமீன்:

ஆதிபெரியவன் புர்கானேயும்
 ஆல நபிசொன்ன அஹாதீதையும்
ஓதி உணர்ந்தநல் உலமாக்களால்
 உண்டாம் குதுபுகள் தன்னேப்பார்த்து
ஈது தீன்மாலே கவியால் சொன்ன
 எளியேன் முஹம்மது எனக்கும் எந்தன்
தாதை அஹ்மது லெவ்வை ஆலிம்
 தனக்கும் கருணேசெய் தம்பிரானே.

***அருஞ்சொல்:-***

*புர்கான்-திருக்குர்ஆன், அஹாதீது-ஹதீதுகள், குதுபுகள்-நூற்கள்.*

***தெளிவுரை:-***

*நல்ல மஹரிபாவின் நான்கு பர்லேயும் இங்கு கூறிய வாறு அறிந்தவர்கள், இறைவனிடத்தில் உண்மை முஸ்லிமாகக் கொள்ளப்படுவார்கள். அவர்கள் செய்த வணக்கங்களெல்லாம் நிறைவேறி சுவனபதியில் நல்லோருடன் சேர்ந்து வாழ்வார்களாக.*

*ஆதி இறையவன் நமக்கருளிய வேதம் புர்கானேயும், பெருமாளுர் (ஸல்) கூறிய ஹதீதையும் கற்று உணர்ந்த உலமாக்களால் இயற்றப்பட்ட கிதாபுகளேயும் கற்று பின் பற்றி நடப்பீர்களாக. இந்த தீன்மாலேயைக் கவியினுல் சொன்ன ஏழை முஹம்மது என்னும் எனக்கும் என் தந்தை அஹ்மது லெவ்வை-ஆலிம் அவர்களுக்கும், நல்லருள் பாலிக்க இறைவனே வாழ்த்துகிறேன்.*